# கவிதைக் குவியல்



கோசுதா






—விற்பனை உரிமை—

தமிழ்ச் சோலை
161, ஆன்ட்ரூஸ் பிளேஸ்
கொழும்பு 15,

## பதிப்பகத்தார்

இளைஞர் கவிஞன் எனப்புகழ் பெற்ற கோசுதா பல பத்திரிகைகளில் எழுதிய தொகுப்பே கவிதைக் குவியல். பன்னிரண்டு வயதிலே இருந்து கவிதை எழுதும் ஆற்றல் படைத்த இவர் பள்ளியில் படிக்கும் பொழுதே கவிதை கட்டுரை, நாடகம், இவைகளில் பரிசு பெற்றவர். இளம் வயதில் பத்திரிகை ஆசிரியராய்ப் பணியாற்றியவரைப்பற்றி அறிமுகம் தேள்வை இல்லை என்றே எண்ணுகிறோம்.

இளைஞர்களுக்கு ஏற்ற வாறு உள்ள கவிதைகளின் கோர்ப்பே கவிதைக் குவியல், படித்துப்பாருங்கள்! வணக்கம்.





முதற் பதிப்பு: 1955



விலை ஒரு ரூபாய்



—வெளியீடு—

இளைஞர் முன்னேற்றப் பண்ணை

வெள்ளவத்தை

அச்சிட்டது: திலக் பிரஸ் கொழும்பு–13,

# முகவுரை

## நேரிசை வெண்பா

வளர்தரும் உள்ள வருங்கால மூதோர்
களிக்கும் கவிதைக் குவியல்——பழகு
தமிழ்மொழியால் கோசுதா தந்தான் தருவான்
அமிழ்தமே ஆகும் அது.

உடுமலை
நாராயணகவி






# இளைஞனே...



தாழேன் தாழேன் என்றிங்கு
துள்ளும் இளைஞனே
வீழேன் வீழேன் என்றெங்கும்
விழித்து எழுந்து,

வாழேன் வாழேன் தமிழ்த்தாழப்
பாரேன் பாரேனென,

மாழ்வேன் மாழ்வேன் தமிழ்க்கென
மார்தட்டு வீரா!



# முரசுகொட்டு

1. பாடுகின்ற நம்தமிழ்ப் பாக்களில்
 பால்சுவை பளிங்கொளி வீசியோட
கூடுகின்ற நம்தமிழ் மக்களின்
 கூறுகெட்ட குறைகூறு பழக்கமோட
தேடுகின்ற நம்வீரத் தேக்கமதில்
 தேனூர்வம் பொங்கேறு பண்புகூட
ஓடுகின்ற இரத்தமதில் ரீங்காரம்
 ஒலிக்கட்டும் தமிழன் என்றே!

# வீரம் காட்டு

2. எங்கெங்கு தமிழர் இருப்பினும்
 ஏவல் புரிந்து
அங்கங்கு தீமை வரினும்
 ஆண்மை சொரிந்து
பங்குதங்க இரத்தம் குழிப்பினும்
 புதுமை தெரிந்து
பொங்கியோங்கு தமிழன் பண்பு
 பொங்கட்டும் எங்குமே!

# காலையும் மாலையும்

1. ஒளியும் இரவும் ஒன்ருக முத்தவே
களிப்பும் ஒலிப்பும் கவிேஞாடு கூடி
வழியும் வாசம் மலரிடை சிந்தப்
பொலியும் தென்றல் புதுமணம் வீச
மலியும் ஒலியே வானிடை விளங்கப்
பொலியும் மலரே பூத்துக் குலுங்க
இருளை நீக்கி இன்பமார்
அருள்தாகக் காலை அழகுற வந்ததுவே!

2. மஞ்சள் கதிரே மருண்டு மறைய
கொஞ்சும் கூக்குரல் எங்கும் ஒழிய
வீசும் வெப்பம் வெருண்டு ஓட
கூசும் ஒளியே குறைந்து நீங்க
மலரும் பல்வித மலர்கள் சுருங்க
கலக்கும் உழவர் கவினிசை குறைய
சோலையில் இருள்தான் சூழ
மாலை வந்ததே வேலை நின்றதே!

# சூரியன்

1. கீழ்த்திசை உதித்துச் செங்கதிர் விரித்துக்
காரொளி எங்கும் ஓட்டிப்
பாழ்த்திசை எல்லாம் பளிங்கொளி சிதறிப்
பாய்ந்துநல் பொன்னுடை போர்த்தி
மேல்திசை அடைந்து மஞ்சள்நீர் குழித்து
மேவிரா போதினிற் றூங்குமுனே
கால்த்தசை நொந்து பிடிக்க முயன்றும்
கணமேனும் நகராக்க டிகாரமே!

2. காலையில் கவினுளி பிணைந்து மலரினம்
காட்சி அளிக்கப் புலர்ந்து
மாலையில் சிவந்த முகிலினை அணிந்து
மலரினம் வாடநீ தளர்ந்து
சோலையில் பறந்து பாடும் புள்ளினம்
சுந்தர நாட்டிய மாடிடும்
வேளையில் கோபங் கொண்டு இருளை
வேய்ந்திட விட்டிடல் முறையோ?

# வெண்ணிலவு

1. வாடாத மாமலரே வானகத்துத் தாமரையே
தேடாத மீன்வண்டு தேனகத்துத் தேடினுமே
தொடாத நிலைக்குத் தூரத்தே ஓடுகினும்
படாது உன்கதிர் பாருக்கு மறைந்ததோ?

2. பளிங்குப் போர்வை போர்த்திப் பார்த்து
விளங்கும் பசுங்கிளி குலமென நடித்துக்
குளிப்பது வெள்ளிக் குளத்திலோ என்றுனைக்
களித்து நான்தான் கேளாதி ருப்பேனோ?

3. இருளுக்குப் பகையாய் இருக்கும் வெண்மை
அருளுக்குத் தாயாய் அமர்ந்த தன்மை
சுருளும் முகிலைச் சுட்டிடும் நிலையை
மருளுந் தொழிலை மகிழ்ந்துவா ழேனோ?

4. கதறும் குழந்தைக்கு கவியாக்கும் வெண்ணிலவே
பதறும் மக்கட்கே பாலூட்டும் தண்ணிலவே
சிதறிய தமிழர்சீர் பெறலைப் பொன்னிலவே
பதமறிய மறைந்துநீ பலநேரம் பார்க்கிறையோ?

# கடல்...

1. பொன்னலை எழுப்பி பொங்குஒளி வீசி
மின்அலை விரித்து மீட்டொலி கூட்டித்
தன்னலை சிறுநகை தவழ்ந்து ஓடப்
பொன்னலை பெயர்த்துப் பாடும்பாற் கடலே!

2. ஓய்வற்ற உன்கதறல் ஆய்வற்ற எம்மின்
தேய்வுற்ற சிந்தைக்குத் தேனாய் அமையின்
சேய்பெற்ற தாய்சேர்க்கும் செவ்விய தாலாட்டு
மாய்வற்ற மடமையை மக்களில் நீக்காதோ?

3. கொஞ்சியே விளையாட அஞ்சாத மீனினமும்
மிஞ்சிய அழகுதனை மீட்டவே முத்தினமும்
தஞ்சமென நதிகளைச் சரணடைய எத்தினமும்
பஞ்சமிலாப் பேரிகை பக்குவமாய் கொட்டுகிறாய்!

4. சில்லெனத் தெளிக்கும் சீர்தென்றல் எங்களுக்குக்
கல்லென வீரியத்தைக் கொண்டுதரும் கண்டினிதே
கொல்லென சிரித்து குமுறியெழும் உன்னலைகள்
நல்லதாம் இச்செயலை நாடியே கற்றதெங்கே?

# மீனினம்...

1. வானின் ஆடையில் விழுந்த வைரமோ
தேனின் இனிமை திரட்டும் வண்டினமோ
கோலம் இட்டுக் கோலடித்து ஆடிவந்து
கால இருட்டில் கண்ணடிக்கும் நங்கையரோ?

2. பரந்து பூத்திடும் பலவர்ணப் பூக்களோ
இரவு காத்துக் கண்விழிக்கும் காவலரோ
புல்லிற் புரளும் பனித்துளியோ முத்தினமோ
மெல்லனக் கூத்தாடும் மெல்லியரோ இல்லையோ?

3. ஒளியின் படையில் மிஞ்சிய வீரரோ
களிஇன் ஓடையில் விளிபொன் மணியோ
புன்னகை பூத்துப் பொங்குமீன் இனமே
உன்னகை எனக்கு ஈந்திடல் அரிதோ?



# தென்றல்...

1. மணமதில் மிதந்து மறைவிலும் விரைந்து
குணமது சொரிந்து குவலயம் பரந்து
பணமது இல்லாப் பலரும் பயனுறக்
கணமதில் வந்தே கவரும் தென்றலே!

2. அரும்பு எடுத்து அழகு தொடுக்கக்
கரும்பு தனிலும் இனிமை கொடுக்க
விரும்பும் இன்ப விருந்து எடுத்துத்
திரும்ப மருந்தாய்த் திரும்பும் தென்றலே!

3. எங்கும் தென்றல் என்றும் பரவ
மங்கும் பகலவன் மறைந்து விரவ
பொங்கும் உன்னின் பொன்வாய் சிரிக்கத்
தங்கும் தண்டமிழ் வீரமே பெருக்காய்!



# நதியின் நாட்டம்...

1. காட்டிலும் மேட்டிலும் கட்டின்றி வந்தேன்நான்
காவியம் பாடியே நாடிவந்தேன்—உன்
வீட்டிலும் செந்தமிழ் வீரியம் கேட்டிட
விரைந்து வீரிட்டு வந்தேனப்பா!

2. பாறையில் சில்லிட மோதிட்டு வந்தேன்நல்
பண்ணிசைத் தமிழைப் பார்க்கவந்தேன்—இங்கு
சீரிய செந்தமிழ் செல்வத்தைத் தேடியே
சீக்கிர சீக்கிரம் ஓடிவந்தேன்!

3. காலையும் மாலையும் காற்று வேகத்திலே
சோலை வயலைக்க டந்துவந்தேன்—தமிழ்
நாவலர் பாவலர் நன்மொழி வித்தகர்
நவின்ற பொன்மொழி கேட்கவந்தேன்!

4. அள்ளுஞ் சுவைதரும் வள்ளுவன் குறளை
ஆய்ந்து உணர்ந்து வழிநடந்து—உள்ளம்
கொள்ளை கொள்கம்பன் கோஇளஞ் சேரனின்
காவிய மாளிகைக் காணவந்தேன்!

# சூழ் நிலையிலே!

1\. சேற்றில் கமலம் சிரிக்குதடி—கெட்ட
சோர்வை விரட்டி அடிக்குதடி.
காற்றில் ஒளியைக் கலக்குதடி—பொல்லாக்
காரிருள் அகன்று போகுதடி.
ஆற்றில் தண்ணீர் முட்டுதடி—நல்ல
ஆர்வம் நம்மில் கொட்டுதடி.
கூற்றில் இன்பம் சொட்டுதடி—மகிழ்
கொண்டுநீ நல்வினை செய்திடடி!

2\. காடும் ஒற்றுமை காட்டுதடி—அது
காட்டும் சேர்க்கை வேண்டுமடி.
கூடும் மலையின் மாண்படி—அதுபோல்
கூடி இருந்திட வேண்டுமடி.
ஓடும் இன்ப ஓவியமடி—பார்த்து
ஓடி ஆடிநீயும் பாடிடடி.
பாடும் இயற்கைப் பாவிலடி—தமிழ்ப்
பண்பு மிதந்திட வேண்டுமடி!

# தமிழ் வளர்ப்போம்

1\. அன்பு எண்ணெய் யில்எரிந்து
ஆர்வ எண்ண மதில்மிதந்து
பண்புத் தமிழ்சு வைசொரிந்து
பாரில் ஒளியை வீசிடுவாய்!

2\. குயிலின் கீதம தைப்போல
குன்று இன்னிசை கூவியிவண்
மயிலின் ஆட்டம் மகளிர்நடம்
மனதிற் கொண்டே வளர்வோம்!

3\. அருவியின் ஓட்டம் தனைப்போல
ஆங்காங்கு பாட்டினி சையுணர்ந்து
குருவியின் துடுக்குப் போல்த்துடித்து
கூசாது தமிழ்ச்சேவை செய்துமகிழ்.



# தந்தை

1. அன்புத் தென்றல் வீசவே
பண்புப் பொன்னொளி பூசியே
முன்பு என்னைப் பெறவே
முனைந்து நின்றார் எந்தை!

2. துன்பக் குமுறல் துறத்தியே
துடுக்காய்த் தினமும் உழைத்தே
இன்ப மாலை சூட்டியே
இனிய குடும்பம் ஓட்டினார்!

3. அம்மா அன்பில் என்றும்
அப்பா நன்று நின்று
இம்மா காலம் வென்று
சுகமே பூண்டு வாழ்ந்தார்!

4. செல்லக் குழந்தைப் போல
செழுமை என்னிற் காண
செல்வம் எனக்குக் கொடுத்தே
சேர்த்தார் அன்பு முத்தம்!

# தாய்

1. துன்ப வெள்ளத்தில் இன்பப் படகோட்டி
தென்றல் காற்றென தெள்ளுகீ தம்பாடி
பண்புப் பள்ளத்தைத் தொட்டுப் பாய்ந்தோட
அன்புக் கலங்கரை அடையும் அம்மா!

2. சித்திரச் சோலையில் பாரா எழில்காட்டி
சிரிக்க எனைவைக்க நிதம்நீ தாலாட்டி
நித்திரை வேளையில் தூங்கு கண்மீட்டி
நானே அயர்ந்தும் அயராயோ அம்மா!

3. துள்ளித் திரிந்த என்னை முத்திக்கட்டி
தூயநல் போதனை தாய்நீ இட்டுக்காட்டி
பள்ளியில் படித்தும் வீட்டில் படிப்பூட்டி
பக்குவ உணவூட்டிப் பூரிக்கும் அம்மா!

4. வீணையில் மீட்டாத ஒலிதனை நீகூட்டி
வீரியம் நரம்பில் விரைய உணர்வூட்டி
ஆணைநீ மீட்டும் குழலிசை நான்கேட்டு
ஆடாது உன்னன்பில் இருப்பேனோ அம்மா!

# தங்காய்!

1. தங்கச் சிலையே தங்காய்
தவழும் காவியப் பூங்காய்
பொங்கும் பைந்தமிழ் மங்காய்
பார்த்திரா ஓவியமே பாராய்!

2. மலரும் தாமரை முகத்தாய்
மாசு அற்ற அகத்தாய்
பலரும் விரும்பும் சுகத்தாய்
பாரின் ஒளியாய் இருப்பாய்!

3. சுந்தரப் புன்னகை பொங்க
சுவர்ண இன்பம் தங்க
தந்திரம் பூக்க எங்கும்
துடிநடை இங்கு போடே!

4. இங்கு மாற்றூர் தொல்லை
இனிமேல் ஒன்றும் இல்லை
என்று தமிழர் எல்லை
ஏற்ற எழிலரிசி வாயேன்!

# தம்பி...!

1. வீரர் குலத்து மாணிக்கமே
வீணர் எரிந்து போகவே
தீரர் வித்து வீர்க்கொழுந்தே
தீண்டு; துடித்திடும் தம்பீ!

2. சிங்கத் தமிழர் பிம்பமே
சினந்து நமையே பேசினில்
மங்கா ஒளிரும் அன்பதால்
மாய்ப்பாய்; தம்பிநீ இன்றே!

3. இதயத் தமிழ்நல் நரம்பே
இங்கு மூலம்நீ அறுந்தால்
புவியில் கலையாம் உன்னையே
பெறவே முடியுமோ தம்பி!



# சிரிக்காயோ!

1. ராஜாவே ஜோராய்ச் சிரிக்க வேண்டும்
   ரோஜாவின் அழகுநின் சிரிப்பில் வேண்டும்
அல்லிதனை வெல்லும் அழகுப்பல் காட்டி
   வல்லவருங் குலுங்க வரம்பின்றி சிரிப்பாய்!

2. மங்கா மதிபோல் சிரிக்க வேண்டும்
   பொங்கும் கடல்போல் பொங்க வேண்டும்
மின்னும் ஒளிதான் ஒளிர்வது போலுன்
   மின்னல் வெல்லும் சிரிப்பு உதிர்ப்பாய்!

3. உள்ள மலர உவகை வேண்டும்
   கொள்ளை இன்பங் கொட்ட வேண்டும்
அன்பு கவர அதுதான் ஆய்தம்
   பண்பின் இருப்பிடம் பாராய் சிரிப்பே!



# பார்த்துவிட்டால்?

1. சின்னஞ் சிறிய குழந்தைதன்
சிங்காரப் பல்லழகு பார்த்துவிட்டால்
பென்னம் பெரிய சிரிப்புத்தான்
பெருக்கு எடுத்து ஓடுதம்மா!

2. மின்னும் பொன்னே பூண்டுவிட்ட
மிடுக்கு நடைதனைக் கண்டுவிட்டால்
எண்ணக் கவலைதான் எனையெங்கோ
எடுத்துக் கொண்டு போகுதம்மா!

3. கொஞ்சிப் பேசும் குழந்தைதன்
கன்னும் வாய்மலரப் பார்த்துவிட்டால்
அஞ்சா நெஞ்சமதில் இன்பத்தேன்
அன்புத் தாலாட்டு பாடுதம்மா!



# முறையோ?

1. கண்ணே மணியே கண்விழி இங்கு
கடிய கொடுமை மலிந்தது
என்னே நீதான் இன்னுமே பொங்கி
எழாது விடுதல் முறையோ?

2. கள்ளங் கபடம் வேண்டாம் உன்னில்
கண்ணியம் பொலிய வேண்டுமே
எள்ளி நகைக்கும் எவரையும் கண்ணில்
ஏனோ சும்மா விடுகிறாய்?

3. அறிவு கொண்ட மனிதரை அன்று
ஆண்டு வந்தார் அந்நியர்
தெரிவு கண்டும் துரிதாய் நின்று
தேடாய் தமிழ்நல் வாழ்வையே!









# அக்காளும் தம்பியும்

1. தம்பி சொல்வேன் கேட்டிடு—இங்கு
தருமம் செழிக்கப் பார்த்திடு!
வம்பு செய்யா திருந்திடு—எங்கும்
வறுமை விரட்டப் பார்த்திடு!

2. அக்கா சொல்வேன் கேட்டிடு—என்றும்
அயரா திருக்கப் பார்த்திடு!
மக்காய் இருந்து விட்டாலே—யாரும்
மகிழ்ந்து இருக்க வாராரே!

3. அஞ்சி என்றும் வாழாதே—தம்பி
ஆண்மை போற்ற மறவாதே!
மிஞ்சி பெருமை கொள்ளாதே—தம்பி
முதியோர் பேண மறவாதே!

4. அன்பில் திகழ்ந்து இருந்தாலே—அக்கா
அண்டி உன்னை வருவாரே!
பண்பில் பரிமளம் சொரிந்தாலே—அக்கா
பெண்மைப் பொலிவு வருமே!

# நண்பனே கேள்!

1. தென்றல் தவழும் கடலோரம்
தேன்பல் முத்துக் கரையோரம்
முன்றல் எழும்புன் னகைப்பாரம்
மூழ்கி உன்னில் கோபுரமோ?

2. வீணையில் மீட்டும் ஒலிபோல
விளைநெல் கூட்டும் பொலிபோல
ஆணையில் நீகட்டும் கனிவாலே
ஆடாதுன் னன்பில் இருப்பேனோ?

3. மலரே மகிழ்ந்து மோதிவர
மணியே தவிழ்ந்து குலுக்கிவர
பலரே பணிந்து பழகிவர
பண்பு அணைநீ கட்டாயோ?

4. பவளப் பொன்னொளி விளக்காய்ப்
பரல்மா ணிக்க ஒளியாய்த்
தவழ அன்பொலி துலக்காய்த்
தமிழில், நண்பனே கேளாய்?

# இதய வீடு

1. முல்லை நகைப்பு அம்பை
 முத்து நாணில் ஏற்றி;
எல்லை இல்லாத் தமிழின்
 எழுச்சி மணியில் பாய்த்து;
கல்லின் கடிய நெஞ்சைக்
 கரைக்க வழியே வகுத்து;
எல்லோர் நல்மனம் புகுந்து
 இருப்பாய் இதய வீட்டில்!

2. பள்ளி மாணவன் என்றால்
 பக்குவப் பாடம் என்றும்
துள்ளிப் படித்து நன்று
 தூய்மை பிடித்து வென்று;
எள்ளி நம்மைக் கண்டு
 ஏதும் சொல்லா திருக்க;
கள்ள மனமே வெறுத்துக்
 காலை வீட்டில் படிப்பாய்!

# இருப்பது யாரோ?

1. கரும்பினும் இனிய கருத்து வீணையில்
கனியினும் கனியும் நம்தமிழ்ப் பாணியில்
அரும்புநல் அன்பு மொழிதான் மீட்டியே
அனைவரும் பண்பு நல்லவை கூட்டியே
இரும்பினும் நெஞ்சம் படைத்த வஞ்சகர்
இதயமே உடைக்க அஞ்சாது துடித்து
விரும்பிநாம் திரண்டு படையே எடுத்திடில்
வீரிடும் நம்மை வென்றிட இருப்பரார்?

2. சுயநலக் கிருமி சூழ்ந்த கூட்டினில்
சிக்கியே தமிழர் தாழ்ந்து பட்டினில்
பயநிலா சூழ்ச்சி எரிமலைப் புயல்தான்
பலரை வீழ்த்தித் தாழ்த்தித் தாலாட்டும்
தயவிலா கோரச் சிரிப்பைக் கொட்டியே
தங்கிட இங்கு பொங்கிட விட்டால்
பயமிகப் புரட்சி மூழ்கியே வரட்சியில்
பீரிடும் பாசம் போர்க்கினில் இருப்பார்?



# முறையோ?

1. தீரத்து வித்தாம் சோழனின் தீரத்தைத்
தீயெனப் பற்றநல் பர்மாவும்
தூரத்து மலையாம் இமயத்து விற்கொடி
தூண்டவே துடித்த சேரனும்
சீரற்று வாழ்வினும் மாள்வது நன்றென
சீறிட்ட கரிகால் கண்டுமே
போரற்றுத் தேறவே வீறுற்று நிற்கும்
போர்வீரா பாரடா உன்னை!

2. அஞ்சாத குப்தரும் அஞ்சினர் தமிழருக்கு
அயராத மௌரியரும் அயர்ந்தார்
கெஞ்சாத அக்பரும் மஞ்சுகொள் அசோகனும்
கெலித்தார் தமிழகம் மதித்தார்
துஞ்சாத கஜனியும் கோரிபாபர் அலெக்சும்
துடித்தார் தமிழனிற் பயந்தார்
மிஞ்சாத தமிழனை மிரட்டுதல் காட்டியே
மடக்கிட விட்டிடல் முறையோ?



# மாணவனே!

1. ஆசிரியர் சொல்லை அன்புடன் கேட்டிடுவாய்
நேசித்து அவர்வழி நேர்மையுடன் நடந்திடுவாய்
யோசித்துப் பாடமே யாசித்தும் படித்திடுவாய்
வாசித்து அதன்வழி மாறாது ஒழுகிடுவாய்!

2. ஆராய்ந்து பாடமே அறிவுவரப் படித்திடுவாய்
சோராது கற்றதை சோம்பருக்கு உரைத்திடுவாய்
பாராமல் அர்த்தமின்றி படிப்பதை விட்டிடுவாய்
மாறாமல் வாழ்வில் தொழிற்கல்வி கற்றிடுவாய்!

3. மாணவன் மாண்பை மகிழ்ந்தே உணர்ந்திடுவாய்
மாணவனே மக்கள் சிற்பியெனத் தெரிந்திடுவாய்
மாணவன் மாணவர் தலைவனென நினைத்திடுவாய்
மாணவனே எதிர்கால மன்னனென அறிந்திடுவாய்



# ஒற்றுமை வேண்டும்

1. அன்பில் விளைந்த அருமைத் தமிழ்மணியே
பண்பில் திழைந்த பக்குவப் பசுங்கிளியே
இன்பத் தமிழை இனிதே பரப்பிடவே
என்பு சதைபோல் ஒற்றுமை இயத்திடுநீ!

2. பொன்னும் மணியும் அணிந்து என்கண்ணே
மின்னும் ஆடை புனைந்து மிகமகிழ்ந்தே
இன்னும் அழகே பெருக்கி இனிமைசிந்த
உன்னுந் தமிழைப் பரப்புவாய் உலகினிலே!

3. முத்துப் பந்தலாம் மோகன வார்த்தையாம்
வித்தையும் நல்லுறவும் வேண்டும் நீசிறக்கச்
சித்தம் சோராது சீராக வாழவிங்கு
நித்தம் சுகமே நீசேர்க்க வேண்டுமே!

***
***
***

# வா

1. தென்னைமரச் சோலையிலே கன்னியிளங் காற்று
சேர்ந்தசையத் துள்ளி விளையாடும் மான்போல
அள்ளித் தமிழமுதைப் பருகவேநீ என்றும்
துள்ளியேதான் வாராயோ பள்ளிநன் மாணவா!

2. புன்னைப் பூமணமதிற் புன்முறுவல் வீசியே
தன்னை சமர்ப்பணம் தமிழுக்குச் செய்ய
எல்லையே இல்லாத இன்றமிழ் ஏடுகளை
எழுச்சிக் கொடிநிழலில் வீற்றிருந்து பாராயோ?

3. அன்னை அகமகிழ அன்பான உன்னினத்து
முன்னைத் தமிழ்மக்கள் மோகன வாழ்வெண்ணி
தேக்கிக் கடல்சேர்க்கும் செல்வம்போற் கலைதனை
ஆக்க மனமுவந்து ஆவலாய் வாராயோ!



# சூழ் நிலைப் பாடம்

1. அரும்பும் அல்லியும் அழகான தாமரையும்
விரும்பும் ரோஜாவும் விரிவெண் லீலியும்
மலர்ந்து நாடோறும் மக்களை கற்பினையே
மகிழ்ந்து இப்புவியில் மறக்காமற் கேட்காவோ!

2. புல்லிற் பனிபோல் புவிமேல் எக்காலும்
புல்லர் வாழ்ந்திடும் பொதுவாழ்வில் புகுந்தாலும்
கற்பில் நீங்காது கண்ணியமாய் நீவாழ்ந்தே
பொற்பில் திகழ்ந்திடக் கற்பாய் பாடமதே!

3. எண்ணெயைத் தண்ணீரில் என்றுமே கலந்திடிடும்
தண்ணீர்மேல் எண்ணெய் தங்கி இருப்பதுபோல்
கெட்டபல நினைவுகள் கிட்டே சூழ்ந்திடினும்
ஒட்டவிட வேண்டாம் உலகிலொரு போதிலுமே!



# சேர்த்து விட்டால்

1. அடக்கு முறைதான் ஆர்ப்பாட்டம் செய்தினும்
மடக்கு தமிழனை எனமடையர் கூவினும்
தொடக்கித் தமிழர் துயர்ப்போர் நடத்தினில்
மடங்கி அன்னியரில் மண்டியிட வேண்டாமே!

2. சங்காரம் செய்தினும் சிங்கமெனப் பாய்ந்துநாம்
மங்காப் புகழடைய மகிழ்ந்தே சிறைசென்று
தங்காரம் என்றேநம் துன்பமது தாங்கினில்
சிங்காரச் செந்தமிழர் சீரடைந்து வாழ்வோமே!

3. உலகெங்கும் தமிழர் உரிமைதான் கேட்கப்
பலமெங்கும் சேர்த்துப் பயனுர் இரத்தப்
பலியெங்கும் கேட்பினும் பண்புள நம்குரல்
ஒலியெங்கும் தொனிக்க ஒன்றெனச் சேவாம்!



# என்றும் நீ!

1. ஒன்றும் உனது எழில்பரவ
   என்ன துன்பம் நேர்ந்தாலும்
   நின்று நிலவும் நிலவேபோல்
   நீயும் புன்னகை புரிவாயே!

2. வீசும் காற்றே போலுனில்
   வெய்ய வறுமை வீசிடினும்
   மாசு அற்று வாழ என்றும்
   மாருது கற்றே கொள்வாயே!

3. உன்றனைப் பிறர்தான் நேசிக்க
   உன்னையும் பிறரே ஆசிக்க
   கன்றிய மாம்பழம் போன்றுன்
   கருத்து மணத்தை வீசாயோ?



# தவழும்காட்சி

1. தெள்ளிய புனலோடை அள்ளித்
தெளித்துத் துள்ளும்
வெள்ளிக்கல் பொன்னுடை பள்ளப்
பளிங்குதனைப் பாராய்!

2. குங்குமம் சிந்தியோட எங்கும்
குவித்த மலராய்
எங்குமே அந்திமாலை பொங்க
ஏகுமுகில் பாராய்!

3. மலரின் மணமது நுகர்ந்து
மாந்தென்றல் கவந்து
பலரின் மனமது கவர்ந்த
பண்கடலைக் கேளாய்!

4. சிங்காரச் சிறுகுழவி சிரிப்பென
சிரித்தமுழு மதியென
தங்குபாரப் படைப்புச் சிற்பிதனைத்
தவழுமோர் காட்சிபார்!

# இளைஞன்

1. இளைஞனே உணர்ச்சிக் குமுறலே
இன்பங் கிளரும் தென்றலே
களங்கம் பிளக்குங்கட் டாரியே
கொதிக்கும் களமே வா! வா!

2. களைப்பிலா நெஞ்சக் கோட்டையே
காட்டாறு மிஞ்சும் கூட்டத்தோய்
அழைப்பிதழ் தந்தேன் அமுதாய்
அன்புதான் கொட்ட வா! வா!

3. நல்லோர் வானின் ஒளியே
நாவின் கலையுணர் களியே
பொல்லார் இருள்வி ரோதியே
பிய்த்திடு தீயோரை போ! போ!

4. காலிகள் சீறினும்நல் சிங்கமே
கடிந்து எழுந்துவீர் இங்குவே
பொலிய வாள்கருத்துக் காட்டியே
கயவர் வீழச்செய் போ! போ!

# பெண்வீரம்

1. போர்மூட்டும் மரபில்வீர் கொட்டினோம்
பார்காட்டும் வழியில்சீர் கூட்டினோம்
மார்தட்டும் பெண்வார் கூட்டமதை
முட்டியே மீழவோ பேதையே!

2. சங்காரம் செய்தினும் எங்களுரிமை
சமமே ஆண்களோடு எனப்பெருமை
இங்கீத முரம்கொட்டும் எம்அருமை
இயக்கப் போரிங்கு கேளாயோ?

3. தாலாட்டுப் பாடிநல் உலகாட்டி
தவழ விடவே சிரிகாட்டி
பாலூட்டி எதிர்ப்பின் பரிவுகாட்டும்
பண்புள பெண்கள் பாரடா!



# பெண்ணே!

1. பூக்கள் பூத்திடும் பூரிப்பு
   பொன்னொளி ஊற்றும் விரிப்பு
   பாக்கள் கொடுக்கும் சிரிப்பு
   பார்த்தேன் உன்னில் பெண்ணே!

2. மின்னல் ஒளியில் கன்ன
   மிளிரும் கண்கள் சொன்ன
   பின்னல் கதைகள் என்ன
   பேரழகிநீ சொல்லேன்?

3. எங்கு இருப்பினும் நீயே
   என்றும் தமிழ்நல் சேயே
   மங்க விடாமல் இதையே
   மெருகு கொடுப்பாய், தாயே!



# உங்களைத்தான்!

1. வீதியில் போவரே வீணாய்ப் பார்ப்பவரே
வழியில் குறும்போ வாயில் அரும்புவது
ஆதியில் மங்கையரோ; அருமைநும் தங்கையரே
அதுவே புரியாரே ஆவேசம் பாய்ப்போமே!

2. வீட்டில் நின்றாலோ ஓட்டையில் பார்ப்பவளே
வெளியே வந்தாலோ வீண்உடை தரிப்பவளே
காட்டுவது தமிழ்பண்போ; கட்டழகி சொன்னாலே
காட்டாறு கோபமோ கருதிப்பார் பெண்மணியே!

3. அழகாய்ப் பேசித்தான் அழகிகளை மயக்கித்தான்
ஆண்கள் கெடுக்கத்தான் அண்டுவது கனவுதான்
பழகாது தொட்டுத்தான் பார்த்தால் பட்டுத்தான்
போவீரே; கெட்டாரே பொல்லாரே உங்களையே!

4. துட்டர் கண்டாலோ துணிவைக் காட்டாமல்
கற்பை இழப்பதோ கண்ணீர் வடிப்பதோ
வெட்டு வாள்போல் வார்த்தை கொட்டினால்
வருவரோ; பார்ப்பரோ வீரர் உங்களைத்தான்!

# அத்தானே வாருங்களேன்

1. மலர்த் தோட்டமோ மாங்காற்று ஆட்டமோ
மதுவின் சாட்டமோ மலர்வண்டு ஓட்டமோ
பலரைக் கேட்டேன்; பண்தமிழ் கண்டபெண்
பண்பின் ஆட்டத்தில் பாடுங்கன்னி நீதானோ?

2. கன்னும் முச்சுவையோ கனிரச ஊற்றோ
கன்னியின் கூற்றோ கருதினேன்; தேற்றெனை
மின்னும் தமிழேற்றி மாவொளி காட்டும்
மறத்தமிழ் அத்தானே மாணாய் வாருங்களேன்!

3. நிலவின் நல்முகத்தாள் நீள்விழித் தாமரையாள்
நறுமலர் கன்னத்தாள் நவமுத்து மேனியாள்
பலரைக் கவரத்தான் பக்குவங் கொண்டவளே
பாசமே தமிழனதால் பாய்ந்ததோடி என்மேல்?

4. மின்னல் வடிவாயும் மிளிர்பூங் கொடியாயும்
மகிழும் குயிலாயும் மயிலாயும் மாறும்நான்
கன்னல் அமுதாய் கன்னித்தமிழ் கேட்டால்
வணங்காது இருப்பேனோ; வாருங்கள் அத்தான்!

# தொழிலாளி துயர்

இளைத்து வியர்வை இரைத்து நித்தம்
உழைத்துக் கண்ணீர் உகுத்துக் களைத்தேன்
முளைத்த அயர்வை முறித்து சித்தம்
சளைத்துக் குறைந்த சம்பளம் பெற்றேன்
காலையில் கதிரவன் காணுது தொடங்கி
மாலையில் மயக்கும் நிலவுதான் வந்தும்
சாலையிற் போவோர் வருவோர் மறைந்தும்
வேலையை முடித்திலேன் வெகுவாய் முயன்றும்
அப்படி உழைத்தும் அந்தோ வறுமை
இப்படி என்றும் என்னை வாட்டுதே
முறைப்படி வேலைக்கு மேன்மை இருந்தும்
நிறைப்படி ஊதியம் நீதியாய்க் கிடைத்ததோ
சோதரா இதுவோ என்கதி
ஆதர வார்ந்தநல் அன்புளத் தோனே!



# உள்ளக் குமுறல்

1. ஓலைக் குடிசையிலே ஒண்டின வேளையிலே
போலிப் பாயிலே புரண்ட நிலையிலே
காலை தன்னிலே கஞ்சியும் இல்லாமல்
கவலை கொண்டே கண்ணீர் சிந்தியே
மூலை பார்த்து முணங்கி உருளையில்
சோலைச் சிந்தனைச் சோர்விலா ஓடையில்
வேலை செய்திடும் தொழிலாளி இல்லையேல்
வேறு கதியோ வெனச்சாந்தி கண்டேன்!

2. நாட்டைத் திருத்துவதும் நல்லவை செய்வதும்
காட்டைத் திருத்துவதும் கயவரை ஒழிப்பதும்
வீட்டைக் கட்டுவதும் வீதியை அமைப்பதும்
ஏட்டைப் படிப்பதும் ஏவுதல் புரிவதும்
சாட்டை கொடுப்பதும் சண்டை தடுப்பதும்
மூட்டை சுமப்பதும் முதுகொடிய உழைப்பதும்
பாட்டாளி எங்கள் பண்பாடு என்றிருக்க
பட்டினி கிடப்பதோ பாரினில் பொறுப்பதோ?



# உழவன்

1. காலை தனையே கவனமாய் அடித்துக்
கையில் ஏர்தனைப் பிடித்து
வேளை விடியும் நிலையில் தொடுத்து
வேலை நிதமுங் கொடுத்தேன்!

2. பக்கு வமாக நிலமே கண்டதும்
பக்குவங் கண்ட விதைதனை
திக்கு எட்டும் தூற்றி விட்டு
தினமுங் கண்ணெனக் காத்தேன்!

3. களையே பிடுங்கி தண்ணீர் பாய்ச்சி
கடின வேதனை நோக்கா
முளையே முற்றிப் பொலிவு வீசும்
முதிர்ந்த வாசம் நுகர்ந்தேன்!

4. கதிரே அறுத்துக் களமே சேர்த்துக்
காணும் தானியம் அளக்கையில்
எதிரே எமனாய் நிலக்காரன் வரவே
ஏன்நிலவு ரிமையெனக் கிலையோ?

# பாரடா பார்...!

1. அங்கமெல்லாம் தேய அரும்பாடு பட்டு
ஆவியெல்லாம் போக எலும்புக்கூடு கண்டு
எங்கெல்லாமோ ஓடி ஏங்கித் தொண்டு
எல்லோருக்கும் ஆற்றும் என்கதி பாரடா!

2. நல்லதெல்லாம் செய்து நலிந்து விட்ட
நண்பன் என்னை வெறுத்து விட்டு
பொல்லாதெலாம் பெய்த போலிகள் கூட்டை
பகிர்ந்து கொள்ளும் துரோகியே பாரடா?

3. செயற்கையெலாம் செழிக்க செந்நீர் பாய்ச்சி
செயலெலாம் தொழில் காட்டும் என்னை
இயற்கையெலாம் சிரிக்க இன்று விட்டவனே
இறுதிமூச்சு உள்ளவரை போர்தான் பாரடா?



# மரமேறி

1. தென்னை பனைபல மரமேறி
தேன்கனி தேடிக் கொடுக்கும்
என்னை எழுதிட ஏன்தானோ
எழுத்தாளர் முனைவ தில்லையே!

2. விண்ணைத் தொடுமரம் தொட்டுநான்
விறகுடன் தேங்காய் பனங்காய்
கண்ணைக் கவரும் நுங்கோடு
களைப்புக் இளநீரும் தருவேனே!

3. உயிரைப் பணயம்வைத் தென்றும்
ஊசலாட அதனை விட்டுநல்
கயிறை வைத்துக் கொண்டுசில்
காற்றாய்ப் பறந்து ஏறுவனே!

4. நெஞ்சை இரும்பாய் ஆக்கியுமே
நெளியும் பாம்பென வளைவுமென்
பஞ்சை நல்சேவை பார்த்துமே
பாரில் ஊக்க யாருளர்?

# கடலோடி

1. கட்டு மரமே கட்டி
கடல் மீது விட்டே
எட்டாத் தூரம் வென்றே
ஏற்றிப் பாயை விரித்தேன்!

2. முட்டும் அலையை மோதி
மும்மு ரமாய்ப் பறந்ததே
கட்டுக் கடங்கா மரமே
கடும்வே கமாகச் சென்றதே!

3. செல்வம் நிறைந்த கடலின்
சேவலாய் நானி ருந்தும்
சொல்லாத் துயரில் ஆழ்ந்து
சொக்கும் அறிவில் வீழ்ந்தேன்!

4. மேனாட்டு வசதிபோ லிங்கு
மேம்பாடு செய்யா ததாலே
நம்நாட்டு மக்கள் நம்மவர்
நலிந்து விட்டனர் அந்தோ!

# தடுப்பதோ...?

1. இங்கு தமிழனை இகழ்ந்தவன்
   இருந்தால் இன்றே
   பொங்கு தமிழன் புலியெனப்
   பாய்ந்து கொன்றே
   கங்கு கரையிலாக் கொடுமைதான்
   காட்ட நன்றே
   எங்கும் முடியும்; எனினும்
   இரக்க ஊற்றும்!

2. பங்கம் ஆசிரியத் தமிழருக்குப்
   புரிந்தது கண்டால்;
   தங்கும் தமிழரின் உரிமைதனைத்
   தெரிந்து கொண்டால்;
   மங்கா மடமை விடுக்கநாம்
   மகிழ்ந்து தொண்டே
   எங்கும் ஆற்ற உறுதியே
   எடுத்தால் தடுப்பதோ?

# தமிழ் எழுச்சி!

1. விரிந்த மலரோ விரிமுகமோ
விண்ணில் ஓடும் நிலவொளியோ;
தெரிந்த தமிழ்மழலை முகங்காட்டும்
தெய்வமே! இதோ என்முத்தம்!

2. வனத்துக் குயிலோ மயிலோ
வசமேஉ னதாக்கும் தமிழதால்
இனத்து நம்மவர் சேர்க்கும்
இன்பமே காணிக்கை என்னன்பு!

3. காரிருள் சூழ்ந்த உலகிலே
கயவர் விரட்ட வந்தவளே
பாரருள் காட்ட பயமிலா
பண்நடை போடுபவளே வருவாயே!

4. இனிக்கும் செந்தமிழ் பெய்து
இன்பமே பலரிடம் கொய்து
மினுக்கும் தமிழ்நல் அரசி
தரணி பரப்பு தமிழெழுச்சி!

# மௌனமோ...?

1. எட்டெட்டும் தொனிக்கட்டும் வீதியெங்கும்
ஏவட்டும் இளைஞர் முழக்கம்!
கொட்டட்டும் தமிழரின் இயக்கம்;
கொதிக்கட்டும் இளைஞர் உள்ளம்!
விட்டிட்டும் கண்டிட்டதால் வீண்வம்பு
விரண்டிட்டும் ஏனோ தயக்கம்?
முட்டிட்டும் உணர்ச்சியலை திக்கெட்டும்
மோதிட்டும் மௌனமோ இளைஞனே?

# நலிதல் நன்றோ?

2. புல்லினம் துதிபாட புவியினில் மெல்லெனப்
பூவிதழ் மணம்வீசப் புகழுற்ற நல்லருவி
கல்லினம் மேலோடிக் கவிதைகள் பாடிடக்
கடலுமின் னிசைபாடக் கவின்சங்கு முழங்கிட
மல்லின மாருதம் மகிழ்தென்றல் வீசிடவே
மாந்தரில் மாண்புசால் மறத்தமிழ் மக்களாம்
நல்லினம் பேசாது மௌனமாய் முன்னேற்ற
நாட்டமின்றி வாழ்ந்திவண் நலிதல் நன்றோ?

# உன்னில்!

கானக் குயிலாய் ஆடுநல்
கவிதை மயிலாய்

வானச் சுடராய் தேனமுது
வழியும் ஊற்றாய்

ஞான முத்தாய் நல்லோர்
நாடும் கலையாய்

மோனக் கவிதைக் குவியல்
மோதட்டும் உன்னில்!

